18th March 1959]

### *Retrenchment of workers in the Electricity Board*

* 863 *Q.*—SRI M. P. SARATHI : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) மின்சார போர்டில் பணியாற்றிய தற்காலிக ஊழியர்கள் எவ்வளவு பேர் நிறுத்தப்பட்டனர் ?

(ஆ) அவர்களைப்பற்றி மின்சார ஊழியர் சம்மேளனத்தினிடமிருந்து கோரிக்கைகள் வந்தனவா ?

(இ) அந்தக் கோரிக்கைகள் மீது அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) It is presumed that the question is in respect of cases of retrenchment of workers represented by the Tamilnad Electricity Workers' Federation before the Negotiating Committee. The number of such cases of retrenched workmen in various places and on various dates was 168.

Subsequently information has been received regarding further retrenchment of 177 workmen.

(*c*ı The Electricity Board has made efforts to re-absorb the retrenched workmen to the extent possible in new works or by diversion to projects. Diversion to projects or re-absorption elsewhere than in the places of retrenchment have not been a success, owing to the disinclination of the workmen to move to places other than those where they have already settled.

SRI N. K. PALANISAMI : அவர்கள் இம்மாதிரி வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்த காலத்தில் பல பேர்கள் அங்கிருந்து நீக்கப்பட்டார்கள் என்று சர்க்காருக்குத் தெரியுமா ? பல பேர்கள் ஏற்கனவே வேலை செய்துக்கொண்டிருந்த இடங்களிலிருந்து பல இடங்களுக்கு மாற்றப்பட்டார்கள் என்பதும் சர்க்காருக்குத் தெரியுமா ? மாற்றிய இடங்களிலிருந்து அவர்களைப் பழைய இடத்திற்கே, அதாவது முன்பு வேலை செய்த இடத்திற்கே மாற்ற சர்க்காருக்கு யோசனை இருக்கிறதா ?

THE HON. SRI V. RAMAIAH : இந்தக் கேள்வி சம்பந்தப்பட்ட வரையில், அப்போதைக்கப்போது எடுத்துக் கொள்ளப்படுகிற சாதாரண ஊழியர்களை ஆட்குறைப்பு செய்கிறார்களே அது சம்பந்தப்பட்டது. சாதாரணமாக, மின்சார இலாகாவைப் பொறுத்தவரையில் எங்கெங்கே வேலைப்பளு கொஞ்சம் குறைகிறதோ அதற்குத் தகுந்தாற்போல் காஷுவல் லேபரர்கள் முதலில் குறைக்கப்பட்டுவருகிறார்கள். ஆனால் அங்கத்தினர் சொல்லக்கூடிய தகவல்களுக்குத் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லமுடியும்.

THE HON. SRI S. PAKKIRISAMI PILLAI : ரிட்ரென்ச் பண்ணும்போது அவர்களுக்கு காம்பென்சேஷன் சட்டப்படி கொடுக்கப்படுகிறதா ? கொடுத்த பிற்பாடும் திருப்பி வேலைக்கு ஆட்கள் வைக்கும்போது அவர்களையே வைக்கவேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI V. RAMAIAH : நான் இப்பொழுது கொடுத்திருக்கும் புள்ளி விவரம் எல்லாம்—காஷுவல் லேபரை ஒவ்வொரு பகுதியிலே எடுத்து அந்தப் புதிய திட்டங்கள் பூர்த்தியானவுடனே அவர்களை நீக்கிவிடவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. மற்றப்படி, நிரந்தரமான ஊழியர்களைப் பொறுத்தவரையில் அவர்களுக்கு எந்தவிதமான குறைவு ஏற்பட்டாலும், இண்டஸ்ட்ரியல் லேபர் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட் பிரகாரம் நடவடிக்கை எடுக்கவேண்டும்.

[18th March 1959

SRI V. K. KOTHANDARAMAN : மின்சார ஊழியர்கள் தங்களுடைய உரிமைக்காக வேண்டி கிளர்ச்சி செய்த நேரத்திலே, பல வருஷங்களாக வேலை செய்த ஊழியர்கள் என்ன காரணத்திற்காக நீக்கப்பட்டார்களோ தெரியவில்லை. ஆனால் அதே நேரத்தில் புதிய ஆட்கள் எடுக்கப்பட்டது உண்மையா ? மின்சார போர்டு அந்த நேரத்தில் ட்ரான்ஸ்பர் யார் யாருக்குச் செய்திருந்ததோ அதெல்லாம் எப்படிக் கான்சல் செய்யப்பட்டதோ அதுபோன்று இந்தத் தற்கால ஊழியர்களைப் பொறுத்தும் நீக்கப்பட்டவர்கள் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படுவார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்ன கிளர்ச்சி காலத்தில் ஏதோ மின்சார போர்டு நடவடிக்கை எடுத்ததாகவும் அவர்களுக்குத் திரும்ப பரிகாரம் காணப்பட்டு விட்டதா என்ற கேள்விக்கு, நிச்சயமாக எல்லாப் பிரச்னைகளும் சமூகமாகத் தீர்க்கப்பட்டு இப்பொழுது எந்தவிதமான கிளர்ச்சி, கஷ்டம் எதுவும் இல்லாமல் மின்சார போர்டு தன்னுடைய கடமையைச் செய்துக்கொண்டிருக்கிறது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI M. JAGANNATHAN : Sir, may I know for what length of time these retrenched workers were in service?

THE HON. SRI V. RAMAIAH : A separate question may be put, Sir.

*Goshalas*

* 864 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of "Goshalas" in the State and the places where they are;

(*b*) the number of private Goshalas;

(*c*) the number of animals on their rolls;

(*d*) whether private Goshalas are receiving grants; and

(*e*) the contribution from the Central Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) *to* (*e*) A statement[a] is placed on the table of the House.

* 865 *Q.*—SRI R. SRINIVASA IYER (on behalf of SRI V. SANKARAN) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that the Gosamvardhana Council of the Central Government had sent a scheme to the Madras Government to open Gosadans;

(*b*) if so, how many have been opened by this Government till now; and

(*c*) if not the reasons for the same?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) No gosadan has been opened till now by the Government.

---

[a] Printed as Appendix III on pages 649 to 650 infra.